கள பூடடிய தோ, வாள, வில, சிவிகை, சநதிரனை யொதத வெணகுடை, இரணடு வெண சாமரஙகள, பொற படிகம, பொறகயிறறுற கடடபபடட முசுபபையுடைய வெளளிய ரிஷபம, நானகு பறகள வெளியில விளஙகுகினறதும பிடரிமயிாகளுடன கூடியதுமான உததமமாகிய குதிரை, சிஙகாசனம, புலிததோல, சமிதது, ஹோமததீ, எலலா விதமான மஙகள வாததியஙகள, அலஙகரிககபபடட வேசிகள, ஆசிரியாகள, அநதணாகள, பசுககள, புணணிய மிருகஙகள, புண்ணியப பறவைகள ஆகிய இவைகளெலலாஞ சிததமா யிருககினறன. அனறியும, நாடடாாகள நகரததாாகள வியாபாரிகள முதலான எலலாசசனஙகளும தஙகள பரிவாரஙகளுடனும மன்னவாகளுடனும வெகு ஆனநதமாகப புகழநதுகொணடும, பேசிககொணடும, 'எப்பொழுது இராமபடடாபிஷேகம நடககும? அதைப பாாததுக களிககவேணடும' என்று எதிாபாாததிருககினறுாகள. ஆகையால, சுமநதிரரே, நீா விரைவாகச செனறு தசரதரை விரைவு படுததி நலல முகூாததந தவறுமல இராமனுககு முடிசூடடி வைககவேணடும என்று அழைததுவாரும" என்றுா.

இவவாறு மகானுகிய அநதவசிஷடமுனிவா சொனனவுடன சுமநதிரா, அதைககேடடுத தசரதமனனரைப் புகழநதுகொணடே அவரிருபபிடததை நாடிவநதாா. சுமநதிரா, வெகு முதுமைபபருவமும அரசருடைய அனபும படைத்தவராகையால அநதபபுரதது வாயிற காவலாளாகள அவரை ஒரு தடையுஞ செயயவிலலை. சுமநதிரரும, அரசரை நாடிசசெனறு அவரிருபபிடஞசோநது, அவருககு வநத துககம தமககுத தெரியாதாகையால அவரருகிற கிடடி அஞசலிபநதஞசெயதுகொணடு தோததிரம பணண ஆரமபிததாா.

சுமநதிரா அரசரைத துயிலெழுப்பிப் படடாபிஷேகததுககு அழைததல

"பாஸகரன் உதிககுமபொழுது எவவாறு சமுததிரஞ

சநதோஷமடைநது களிககின்றதோ அவ்வாறு தாங்க ளும சநதோஷியுஙகள. மாதலி என்பவன் இநதிரபகவா னைக காலைபபொழுதில துதித்தான; அதனால, இநதிர பகவான அசுராகளை வெறறிகொணடார்; அவ்வாறு நா னும தஙகளைத் துதிககினறேன. வேதஙகளும் அதன் அஙகங்களும மறற வித்தைகளும பரமபொருளுககுப போதிபபது போன்று நான் இபபொழுது தஙகளுககுப போதிககினறேன. சநதிரனுடன்கூடிய சூரியனுனவன், அநேகம பிராணிகள நிறைநது நிற்கும இபபூமியை உணாததுவதுபோல, நானும் இங்குவநது தஙகளை நித திரை ஒழிநது எழுநதிருககும வணணம உணாத்துகின றேன். எழுநதிரும; விரைவாக நலல ஆடையாபரணஙகள அணிநது, மேருகிரியின் சிகரததை விடடுச் சூரியபகவான் எழுவதுபோல இவவிடததைவிடடுத தாஙகள வரவேண் டும சூரியன், சநதிரன, சிவன், குபேரன, வருணன், அக் கினி, இநதிரன் ஆகிய இவாகளெல்லாரும தஙகளுககு வெறறியைக கொடுககக கடவாகள. இரவோ கழிநதது; இனி எழுநதிருநது செயயவேணடிய காரியஙகளைச செய யுஙகள. இராமாபிஷேகததிறகு வேணடிய எலலாப பொருளகளும வநதுவிட்டன. நாடடாா, நகரததார், வணி கா ஆகிய எலலாராலும அஞசலி செயயபபடடவராய மகாமுனிவராகிய வசிஷடரும அநேக அநதணர்களுடன் தஙகளுடைய வரவை எதிாபாாததுககொணடிருககின்றுர். சீககிரமாக இராமருடைய படடாபிஷேகததை நடதத விடைகொடுஙகள். அரசன காணபபடாத நாடு, இடைய னிலலாத பசுக்குழாம போலவும நாயகனிலலாத சேனை போலவும சநதிரனிலலாத இரவுபோலவும் ஆயவிடும" எனறு உரைததனா.

சுமநதிரா இவ்விதமாகச் சொன்ன பொருள்பொருந் திய நயசசொலலைக கேடடவுடன், தசரதருடைய துககம் மீடடும புதிதாகப் பொஙகிறறு. பினனா, தாாமிகரான

அவ்வரசா, புததிரா விஷயமான மகிழசசி அறறவராய, அநத மநதிரியைத தமது சோகததாற சிவநதகணகளினற பாாதது, " சுமநதிரரே, நீா செயத தோததிரம, பிளநதிருககும மனததை மீணடும பிளககினறதே!" எனருா. இவவளவு தீனமாகிய ஸவரததோடு அரசா சொனனதைக கேடடு, சுமநதிரா, அவரிருநத பரிதாபநிலைமையையுஙகணடு, தாம சமயம அறிநதுகொளளாது நடநததாகத தெரிநதுகொணடு அஞசி, கூபபிய கையராய, அவவிடததை நீஙகிச சறறு ஒதுஙகினுா. அரசா, சோகததால ஒரு வாாததை சொலலுதறகும சகதியே இலலாமலிருநதாா.

சுமநதிரருடைய அசசம

மன்னவா அவவாறிருககையில, ஆலோசனையில சமாததையான கைகேயி, சுமநதிரரைபபாாதது, "சுமநதிரரே, இராமனுககு நாளைத்தினம படடாபிஷேகம எனற சந்தோஷததால இரவு முழுவதும அரசா விழிததுக கொணடே இருநதாா. அதனுல அவருககு இனனும தூககந தெளியவிலலை. ஆகையால, நீா சென்று புகழ்பெறற அநத இராமனை இஙகு அழைததுவாரும. உமககு மஙகளம உணடாகுக, ஒன்றும ஆலோசிககவேணடாம" எனருள. அவரும, இராமருககு ன்மை வநதுவிடடது என்றே எணணிககொணடு அகமகிழநது, அரசா ஆணை என்றெணணி அவவிடம விடடு நீஙகினுா. "போம, போம" என்று வேகமாக அவளால அனுப்பபபடட சுமநதிரர், இராமரைப படடாபிஷேகததிறகுததான் அரசர் வரவழைக்கினறுா என்று எண்ணி, இராமரைக காண வெகு ஆநநதத்தோடு சென்றுா. சுமநதிரா, சமுததிரததினுள அடஙகிநிறகும மடுவைப போன்ற அநதப புரத்தினுடைய ஜனங்கள்சூழ்நதவாயிலினின்றும் வெளியிலவநது, இராமருடைய படடாபிஷேகததை ஆவலுடன்

இராமரை அழைததுவரக கைகேயி ஏவுதல

எதிர்பார்த்துக்கொண்டு அக்காலத்தில் மரியாதை செய்ய வேண்டியதற்காகத் தங்கள் கையில் மிக்கபொருள்களை ஏந்திக்கொண்டிருக்கும் அநேகதேசத்து அரசர்களையும் பட்டணத்தார்களையும் நாட்டார்களையும் மற்றுமுள்ள ஜனங்களையும் பார்த்தார்.

## பதினைந்தாஞ் சருக்கம்:

## சுமந்திரர் இராமரை நாடிச் செல்லுதல்.

இரவு கழிந்தவுடன், வேதங்களின் கரையைக் கண்ட பிராமணர்களும், ராஜகுலத்துப் புரோகிதர்களும், மந்திரிகளும், சேனைத் தலைவர்களும், பட்டணத்திற் பிரதானமானவர்களுஞ் சேர்ந்து இராமருடைய பட்டாபிஷேகத்தைப் பற்றி மகிழ்ந்தவர்களாய்ச் சபையை அடைந்தார்கள். சூரியன் உதயமாக, பூசநக்ஷத்திரத்துடன் கூடிய இராமருடைய ஜந்மலக்கினமாகிய கடகலக்கினம் வந்தது. அந்தணத் தலைவர்கள் பட்டாபிஷேகத்திற்காக வேண்டியபொருள்களைச் சித்தப்படுத்தினார்கள்.

பட்டாபிஷேகப் பொருள்களெல்லாம் சித்தமாதல்

பொன்மயமான தீர்த்த கும்பங்கள், அலங்கரித்திருக்கும் மங்கள பீடங்கள், புலித்தோல் பரப்பிய இரதம், கங்கையும் யமுனையுங் கூடுமிடத்தினின்று கொண்டுவரப்பட்ட புண்ணிய தீர்த்தம், இன்னும் வேறு புண்ணிய நதிகளிலிருந்தும் மடுக்களிலிருந்தும் கிணறுகளிலிருந்தும் பொய்கைகளிலிருந்தும் கிழக்குமுகமாக ஓடும் கோதாவரி காவேரி முதலியவைகளிலிருந்தும் மேற்குநோக்கி எழும் பிரவாகங்களையுடைய பிரமாவர்த்தம் முதலியவைகளினின்றும் தெற்காகவும் வடக்காகவும் ஓடும் கண்டகி சோணபத்திரை முதலியவைகளினின்றும் கொண்டுவரப்பட்ட தீர்த்தங்கள், பொரிகளை உடையனவாயும் விளாமுதலியவற்றால் மூடப்பெற்றனவாயும் பொன்னினாலும் வெள்ளியினாலுஞ் செய

யபபடடனவாயும தாமரை நீலோறபலம இவைகளுடன் கூடிய தீாததஙகளை யுடையனவாயு மிருககும பூாணகும பஙகள, தேன, தயிா, நெய, பொரி, தருபபை, மலா, பால, தமது ஒழுககத்தினின றும தவிராதவராயும எலலா ஆபரணஙகளையும பூணடு விளஙகுகினறவராயு மிருககும வேசியா, இரத்தினஙகள இழைத்த பொன்மயமான காமபுகளை யுடையதும சநதிர கிரணஙகளபோல பரவிய காநதிகளையுடையதும இரததினஙகளால அலஙகரிககப பெறறதுமான பொறசாமரை, சநதிரமணடலத்தை யொத்தவெணகொறறககுடை, வெளளிய ருஷபம, வெள் ளிய குதிரை, படடத்துயானை, எலலா ஆபரணஙகளையும அணிநத எடடு மங்களகனனிமாா, அநேகவிதமான வாத் தியஙகள, வநதிகள முதலிய படடாபிஷேகபபொருளகள இக்ஷ்வாகுவமசத்தில பிறநதவாகளுககு எவவாறுசேககப படுமோ, அவவாறான சிறநத பொருளகளை இராமருடைய படடாபிஷேகததின் பொருடடுத தசரதருடைய கட டளையின்படி கொணடுவநது ஒனறுகசசோநத அரசர்கள, தசரதரைக காணுமல தஙகளுககுள "நாம சிததமாக இருபபதை அரசரிடம இபபொழுது யாா தெரிவிப பாா? சூரியனே உதயமாயவிடடான; அரசரை இன னுங காணேம. எலலா உபகரணஙகளுஞ சித்தமாயிருக கினறன" என்று சொலலிககொணடிருககுமபொழுது, அரசருடைய மதிபபைப பெறற சுமநதிரா, அஙகு வநது அவாகளைப பாாத்து, "அரசருடைய கடடளையினபடி இராமரை விரைவாக அழைததுவர நான போகின் றேன; ஆயினும, அரசருககும இராமருககும நீஙகள மிக வும பூஜிககத் தககவாகளாகையால, சிரஞசீவிகளான நீஙகள கேடடதாகத் தசரதருடைய க்ஷேமததையும், விழிததிருநதும அவா இஙகு வருவதறகுத தாமதிபபதன காரணததையும விசாரித்துவருகின்றேன" எனறுசொலலி மீடடும தசரதா இருநத கைகேயியின மாளிகைககு வந்

தார்; அதனுடன் புகுந்து, இக்ஷ்வாகுவம்சத்தைப் புகழ்ந்து கொண்டே, மன்னர் படுத்திருக்கும் அறைக்குட் சென்று, அங்கு இடப்பட்டிருந்த திரைக்கு வெளியில் நின்று மறு படியும் தசரதரைநோக்கி "ககுஸ்த வம்சத்தில் பிறந்தவரே, சூரியன், சந்திரன், சிவன், குபேரன், வருணன், அக்கினி, இந்திரன் ஆகிய இவர்கள் தங்களுக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும். நல்ல இராத்திரி கழிந்தது. அபிஷேகத்திற்கு வேண்டியவை சித்தமாக இருக்கின்றன. கண் விழித்துச் செய்யவேண்டிய காரியத்தைச் செய்யுங்கள். பிராமணோத்தமர்களும், சேனாதிபதிகளும், ராஜ சிரேஷ்டர்களும், பட்டணத்துப் பிரதானிகளும் காத்திருக்கின்றார்கள்" என்று கூறினார்.

சுமந்திரர் மீண்டும் தசரதரை உணர்த்தல்

அவரது சத்தத்தினால், அவ்வாறு கூறியவர் பேசுவதில் வல்ல சுமந்திரர் என்று தசரதர் அறிந்துகொண்டு, "சுமந்திரரே, 'இராமனை அழைத்துவாரும்' என்று கைகேயிசொல்லியிருக்க, யாதுகாரணத்தால் எனது வார்த்தையை மீறி நடந்தீர்? நான் தூங்கவில்லை. சீக்கிரமாக எனது இராமனை அழைத்து வாரும்" என்று கட்டளையிட்டார். மன்னவர் இவ்வாறு சொன்னவுடனே, சுமந்திரர், தலையால் வணங்கி, பெரிய நன்மை வந்துவிட்டதென்று நினைத்தவராகி அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, ராஜவீதியை அடைந்து அங்கங்குப் பதாகைகள் தவஜங்கள் கட்டியிருப்பதைக் கண்டு உடல்புளகித்துக் களித்தவராய்த் தாம் சென்ற வழிகளிலெல்லாம் ஜனங்கள் இராமபட்டாபிஷேகத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பதைக் கேட்டு மகிழ்ந்தார். பின்பு சுமந்திரர், இந்திரனது மாளிகை போலவும் கைலாயமலையின் சிகரம் போலவும் ஆகாயத்தை அளாவி நிற்கும் இராமருடைய மாளிகையைக் கண்டார். அம்மாளிகை பெரியகதவு அமையப்பெற்றதும், நூறு திண்ணைகள்

தசரதர் கட்டளை

பொருந்தப்பெற்றதும், பொற்பதுமைகள் அங்கங்கு வைக்கப் பட்டதும், இரத்தினங்களாலும் பவழங்களாலுஞ் செய்த வாயிலையுடையதும், சரற்காலத்து மேகம் போல வெள்ளியதும், வெகு பிரகாசமாய் விளங்குவதும், மேருமலையின் குகைபோலத் தோன்றுவதுமாக இருந்தது. அது, இடையில் இரத்தினம் இழைத்த விலையுயர்ந்த சுவர்ண மாலைகளால் அலங்கரிக்கப்பட்டுமிருந்தது. அவ்வீடு, முத்து மாலைகளால் அலங்கரிக்கப்பெற்று, சந்தனம் அகில் இவைகளின் தூபங்களை அடைந்ததாய், சந்தனம் பிறக்கும் இடமான தாத்தர பருவதத்தின் சிகரம்போல வாசனை வீசிக்கொண்டிருந்தது. அதில் அன்னப் பறவைகளும், மயில்களும், களித்துக்கொண்டும், கூத்தாடிக்கொண்டும் இருந்தன. அது, கண்ணைப் பறிக்கத்தக்க அழகிய தொழில் அமைந்த செந்நாயால் விளங்கிற்று. அதில் எங்குப்பார்த்தாலும் கோலங்கள் இடப்பட்டிருந்தன. அம்மாளிகையின் காந்தி, பார்ப்பவர்கள் மனத்தையும் கண்களையும் தன்னிடம் இழுப்பதாக இருந்தது. குபேரனது மாளிகையோ, மகேந்திரனது அரண்மனையோ என்று கண்டோர் சந்தேகிக்கும்படி இருந்த சந்திர சூரியர்களையொத்த அந்தக்கிருகம், அநேகவித பட்சிகளுடைய சத்தங்களை யுடையதாய் விளங்கிற்று. அவ்விதமாய் விளங்குகின்றதும் மேருவின் சிகரத்தைப் போலவுமான இராமருடைய மாளிகையில் இராமாபிஷேகத்திற்காகக் களிக்கும் அநேக ஜனங்கள் அஞ்சலிபந்தம்பண்ணிக்கொண்டும், அநேககிராமஜனங்கள் காணிக்கைப்பொருள்களைச் சித்தமாய் வைத்துக்கொண்டும், இராமரைக் காணும்பொருட்டு மிக்க ஆவலுடன் நின்றுகொண்டிருந்தார்கள். குள்ளர், வேடர் இவர்களால் சூழப்பெற்ற அவ்வரண்மனை, அநேகவித ரத்தினங்களால் நிறைந்து உயர்ந்து நன்றாக அலங்கரிக்கப்பெற்று மேக மண்டலம்போல விளங்கிற்று. குதிரைகட்டியதாயும், மறை

இராமர் திருமாளிகை

யிடத்தைப் பெற்றதாயுமுள்ள இரதத்தோடு, ஜனங்கள் நிறைந்த இராமரது மாளிகையைக் குறித்து வருகிற சுமந்திரர், நகரத்துச் சனங்களெல்லாருடைய மனத்தையுஞ் சந்தோஷப்படுத்தினார், அவ்விடத்தைச் சேர்ந்தவுடன், மிக்கசம்பத்தை யுடையதும் சிறந்த பொருள்களெல்லாந் தங்குதற்குரியதுமான இராமகிருகத்தைப் பார்த்து மனம் உவந்து, தேவேந்திரன் மாளிகையை நிகர்த்ததான அதனுட் புகுந்தார் அவர், கைலாசபருவதத்தையும் தேவதைகளின் மாளிகையையுமொத்ததாயும் அலங்கரிக்கப்பட்டதாயு மிருக்கும் அம்மாளிகையின் கட்டுக்களிற் புகுந்து, இஷ்டராயும் இராமர்மீது அன்புள்ளவராயு மிருக்கும் அனேக ஜனங்களைக் கடந்து, இராமருடைய அந்தப்புரத்தினருகிற சேர்ந்து, அங்கு ஜனங்கள் கூட்டங் கூட்டமாக நின்றுகொண்டு இராம பட்டாபிஷேகத்தைப்பற்றிச் சந்தோஷமாக மங்களவார்த்தைகள் பேசிக்கொண்டிருக்கக் கேட்டுச் சந்தோஷமடைந்தார். இராமருடைய மாளிகையோ, இந்திரன் அரண்மனைபோல அநேக பட்சிகளாலும் மிருகங்களாலும் நிறைந்து, மேருவின் சிகரம்போல வெகு காந்தியுடன் மனோகரமாக விளங்கிறது. அதன்வாயிலில் கோடிக்கணக்காகச் சனங்கள் காணிக்கைகளுடன் அஞ்சலி பந்தம் பண்ணிக்கொண்டு தங்கள் தங்களுடைய வண்டிகளையும் குதிரைகளையும் வெகு தூரத்தில் நிறுத்தி இராமருடைய தரிசனத்தை எதிர்பார்த்தவர்களாய் நின்றுகொண்டிருந்தார்கள், சுமந்திரர், அம்மாளிகையின் முன்னர் இராமர் ஏறுவதற்காக நிறுத்தப்பட்டிருந்ததும் மேகம்போலவும் மலைபோலவும் தோன்றும் தோற்றத்தையும் உயர்ந்தமுன்வடிவத்தையும் உடையதும் அங்குசத்துக்கும் அஞ்சாததுமான மதித்த 'சத்துருஞ்சயன்' என்ற இராமரது வாகனமாகிய அழகிய யானையையும் கண்டார்.

சுமந்திரர், நல்ல ஆடையாபரணங்களை அணிந்து குதிரைபூட்டிய வண்டிகளின்மேலும் யானைகளின்மேலும் ஏறி

வநத இராமருடைய பிரதான மநதிரிகளையும நூறறுக கணககாய வநத அனபாகளையும கடநது, விலையுயாநத அநேக ரததினஙகளைத் தனககுள அடககிககொணடிருககுஞ சமுததிரத்தில தடையிலலாமல முதலையானது முழுகுவதுபோல, மலையினது சிகரஙகளையும அசையாத மேகஙகளையு மொததததாயும, உயாநத விமானஙகளைககாட்டிலுஞ சிறநத மாடஙகளையுடையதாயும, சமபததுககளை அடைநததாயுமிருககுமஅநதபபுரததில தடையிலலாமறபுகுநதாா.

சுமநதிரா இராம கிருகததினுட செலலல

## பதினாறுஞ் சருக்கம்:
## சுமந்திரர் இராமரைத் தசரதர் அழைப்பதாக அழைத்தல்

சுமநதிரா, ஜனஙகள நிறைநது நிறகும அநதபபுரதது வாயிலைக கடநது, யௌவனமுடையவாகளும, அழகிய குணடலஙகளைத தரிததவாகளும, அரசரிடததில அனபுளளவாகளும, கையில வாளும விலலும பிடித்தவாகளும, வெகு ஜாககிரதையாகத் தஙகள காவறறொழிலில முழுமனத்தையும வைததவாகளுமா யிருபபவாகள நிறைநத கடடை அடைநதாா; அதில, காவிததுணி உடுத்துககொணடு, கையிற பிரமபு பிடித்து, நலல ஆடையாபரணஙகள் அணிநது வாயிலில இருநதுகொணடு மாதாகளைககாககும முதியவாகளைக கணடாா. இராமருடைய விருபபத்தைச செயயவிருமபுகினற அவாகளெலலோரும, சுமநதிரரைக கணடவுடன பரபரபபுடன தாங்கள இருநத இடததை விடடு எழுநதுநினறு மரியாதை பணணினாகள. மிகவும் வலலமை பொருநதியவரும வணககமுடையவருமான சுமநதிரா, அவாகளைப பாாதது "நான வாயிலில் வநது காததிருககினறேனெனறு இராமரிடம விரை

வாககசசொலலுஙகள" என்றூா. அவாகள், தஙகள தலைவ ருககு விருபபமானதைச செயவதில் கருததுளளவாகளா கையால, உடனே உடசெனறு சீதாதேவியுடன இருக கும இராமரிடம் அவவாறே விரைவாகச சொனனூாகள். இராமா, தமது தநதைககு அநதரஙகரான சுமநதிரா வந

இராமா சுமநதிரரை வரவழைத்தல

திருபபதாகக கேடடவுடன, 'தசரத ருககு விருபபததைச செய்யவேணடும' எனற எணணததால அவரைத தாமிருநத அவவிடததிற்கே அழைபபிததாா. சுமந திரா, உடபுகுநதவுடன, நலல விரிபபுப பரபபபபடடிருநத பொறகடடிலில இராமா நலல ஆடையாபரணஙகள அணிநதுகொணடு குபேரன்போலவீறறிருககக கணடாா. வராகததின இரத்தத்தை ஒததததாயும, சுததமானதாயும, இயறகை மணம பொருநதியதாயு மிருககும சிறநத சநத னததை அணிநதவரும, கையிற சாமரம ஏநதிப பககத தில நிறகுஞ சீதாபிராடடியுடன கூடியவரும, சதது ருககளைக கொலலுந தன்மை வாயநதவருமான இரா மா, சிததிராதேவியுடன் கூடியிருககுஞ சநதிரன் போல விளஙகினூர். வணககத்தையுடைய சுமநதிரா, சூரியனபோல தமது காநதியால விளஙகிககொணடிருப பவரும கேடபவரது இஷடததைக கொடுபபவருமான இராமரைக கணடு வணஙகினூா. பின்பு, தசரதருடைய ஏகாநத சமயததிலும அருகிலிருககுமவரான சுமநதிரா, அஞசலிபநதஞ செயதுகொணடு இராமரைப பார்தது க்ஷேமத்தை வினவி, "ராம, கௌசலை உமமைப பெற

சுமநதிரா இரா மரை அழைததல

றதால் வெகு பாககியசாலி உமமை உம் முடைய தமபபனூா கைகேயியுடன் பார் கக விருமபுகினறூா. விரைவாக அவவி டம வரவேணடும" எனறூா. இதைக கேடடவுடன், புருஷசிரேஷ்டராயும மிகக காநதியை யுடையவராயு மிருக கும இராமர், சுமநதிரரைக கொணடாடி, தமது தநதை

யாரின கடடளைபபடி நடபபதறகு விரைநது, தமது மனைவியைப பாாதது, "சீதே, சநதேகமிலலை, என்னு டைய பிதாவும மாதாவும எனது படடாபிஷேக விஷய மாக ஏதோ ஆலோசனை பணணிககொணடிருககினறுா கள. கணணழகுடையவளே, எனககு நனமை செயய விருமபினவராயும, மிகச சமாததையாயும, நான பொரு ளைப பெறுவதில விருபபுடையவராயும, எனது மாதா வாயுமிருககும கைகேயி, தமது கணவருடைய அபிபிரா யததை நனறுக அறிநதுகொணடு சநதோஷமடைநது, எனது அபிஷேகததைச சீககிரமாக நடததிவைகக அரச ரைத தூணடிககொணடிருககினறுா அரசரும கைகேயி யும, அநதபபுரததிலிருநது எனனை அழைத் து வருதறகு, ஆததகாமஙகளை விருத்தி செயபவரான சுமநதிரரைத தூதுஅனுபபி ஞாகள தூதரும அநதபபுரததி லிருபப வாகளபோல நமது க்ஷேமததை நாடி இஙகு வநதிருககின் றுா. நிசசயம, இனறைத்தினமே மகாராஜா எனககு இளவரசுபபடடஙகடடபபோகினறுா. ஆகையால, நான் சீககிரததில அவரைக கண்டு வருகின்றேன. நீயும இவ விடததிலேயே உனது பரிவாரஙகளுடன சுகமாக மகிழசசி யுடன இரு" என்றுா.

இராமா தாம செலலுதலைச சீதைககுககூறல

கணவனுல கொணடாடபபடடவளும கறுதத கண களை யுடையவளுமான சீதை, இவவிதமாகச சொலலிவிட டுப புறபபடுகினற இராமரைப பாாதது, "பிரமதேவா இநதிரனுககுப படடங் கடடுவதுபோல, தசரதமனனா தஙகளுககு இனறு அநதணாகளநிரமபியஇநதஇராசசியத் தில, ராஜசூய யாகத்தில செயயும அபி ஷேகத்திறகுத் தகுதியை உணடாககும் அபிஷேகத்தைப பணணி வைககவேண டும். அந்த ராஜசூய யாகததிறகாகத் தீக்ஷை செயது

சீதை வாழததுதல

கொண்டும் மான்தோல் தரித்தும் மான கொம்பைக் கையில் வைத்துக்கொண்டும் சுசியோடு விரதத்தை நன்கு செய்பவரான தங்களை அடியேன் பார்த்து மகிழ்ச்சி அடைய வேண்டும். தங்களைக் கீழ்த்திசையில் இந்திரனும், தென் றிசையில் யமனும், மேற்றிசையில் வருணனும், வட திசையிற் குபேரனும் காக்கக் கடவர்கள்" என்று மங்க ளங்களை மனத்தினுற் கருதியவளாய் வாயில் வரையும் பின் சென்றுள். அபிஷேகத்திற்கு வேண்டிய மங்களங் களைச் செய்து முடித்தவரான இராமர், பின்பு சீதைக் குச் செல்ல விடைகொடுத்து விட்டு, ஒரு மலையினது குகையில் வசிக்கும் சிங்கம் அம்மலையை விட்டுப் புறப் படுவதுபோல, சுமந்திரருடன் அம்மா ளிகையை விட்டுப் புறப்பட்டார். ராஜ குமாரரான இராமர், வாயிலில் லக்ஷ்ம ணர் அஞ்சலிபந்தம் பண்ணிக்கொண்டு நிற பதைப் பார்த்தவராய், அன்பர்களுடன் நடுக்கட்டிற் சேர்ந்து, அங்கே தமது சேவைக்குக் காத்திருக்குமவர் களைப் பார்த்துக் கிட்டிச் சந்தோஷித்து, அக்கினிபோற் காந்தியால் விளங்குகின்றதும் வெள்ளியாற் செய்யப் பட்டுப் புலித்தோலாற் போர்க்கப்பட்டதுமாகிய சிறந்த தேரின்மீது ஏறினர். மேகம்போற் சத்திப்பதாயும், மிக்க பரப்பை யுடையதாயும், இரத்தினம் பொன் இவைகளால் அலங்கரிக்கப் பெற்றதாயும், சூரியகாந்திக்கொப்பாகிய தனது பிரகாசத்தினுல் பார்ப்பவருடைய கண்களைக் கவர் வதாயும், யானைக்குட்டிகளைப் போன்ற சிறந்த குதிரைகள் கட்டப் பெற்றதாயும் விரைவாகச் செல்வதாயு மிருக்கும் இரதத்தின்மீது ஏறி இராமர் இந்திரன்போல வெகு அழ குடன் விளங்கியவராய்ப் புறப்பட்டார். அந்த இரதத் தின்மீது ஏறித் தேககாந்தியினுல் விளங்கும் இராமர், ஆகாயத்திலுள்ள மேகம்போலத் தமது இரதத்தால் திக் குக்களைச் சத்தமுண்டாகும்படி செய்துகொண்டு, உதய

இராமர் தேரேறிச் செல்லுதல்

பருவததநினினறு சநதிரன வெளிபபடுவதுபோல வீடடி
னின்று வெளிபபடடார லக்ஷமணா இரதததின பின்
புறத்தில ஏறிக கைகளில வெணகுடை சாமரம இவை
களைப பிடிததுககொணடு தமது தமையனாரை வெயில
முதலியவறறினினறு காபபாறறினார அவா வெளியில
எழுநதவுடன அஙகிருநத சனக கூடடததினினறு ஒரு
பெரிய ஆனநத முழககம உணடாயிறறு. நூறறுககணக
காகவும, ஆயிரககணககாகவும குனறுகள போனற யானை
களும குதிரைகளும இராமருடைய பினனே சென்றன.
அவருககு முனபாக, ஆயுதபாணிகளாயும், தஙகளு
டைய சரீரஙகளிற சநதனததையும அகிலையும பூசியவாக
ளாயும, கைகளில வாள வில இவைகளைப பிடிததவாக
ளாயும இராமருககு மஙகளததைப பிராாத்திபபவாகளாயு
முளள சூராகளான ஜனஙகள நடநதாாகள செலலும
வழிகளில, மஙகளவாததியஙகள கோஷிகக, வநதிகள்
புகழபபாடடுககளைப பாட, வீராகள சிஙகநாதஙகளைச
செயதுகொணடு நினறாாகள. நன்றாக அலஙகரிததுக
கொணடு படடாடைகளை அணிநதுளள மகளிா, உபரிகை
யில நினறுகொணடு, அவா செலலும்போது, சததுருக
களை அடககும அவாமீது, பலகணி வழியாகப புஷபங
களை வாரிததூவினாகள மேனமாடஙகளில உளளவாக
ளும, கீழததலததில இருபபவாகளுமாகிய குறறமறற
அஙகததைபுடைய மாதரெலலோரும, அவா மனததைக
களிபபிகக விருமபினவாகளாய, குறறமறற சொறகளால,
அவரைபபாாதது “மாதாவைக களிபபிககுமவரே, உமது
தநதையிடமிருநது படடததைப பெறறுககொளளுதறகு
நீா போவதைப பாாதது உமது தாயாராகிய கௌசலை
யானவள ஆனநதககடலில முழுகுவாள” என்று துதித்
தாாகள். இமமஙகையாகள, ‘இராமருடைய மனததைக
கவருஞ சீதை, எல்லா மாதருளளும சிறநதவள’ என்று
எணணினபடியால மேனமாடததிலிருநது கூறிய “சீதா
தேவி எவ்வளவோ தவம புரிநதிருககவேணடும, இலலா

விடில அவள, ரோகிணி சநதிரனை கணவனாக அடைநதது போல இராமனை கணவனாக எவவாறு அடைநதிருககக கூடும?" எனறுறபோன்ற பறபல இஷ்டமான வார்த்தை களை ராஜமாரககததிற செலலுமஇராமா கேடடார. அன்றி யும, இராமா, நான்கு பககஙகளிினினறும தமமைப பார்க்க வநத ஜனஙகள சொலலும, லோகததில நிகழுந கதைகளை யும, வெகு ஆனநத மடைநதுளள படடணத்து ஜனங்கள் தமமைபபறறி "இதோ போகினறுரே இராமா; இவர் தமது பிதாவினிடமிருநது இன்றைககு மிகக செலவததை அடையப போகின்றுா நமமை ஆளபவராக இவரை நாம பெறபபோகினறதால, நமது எணணமெலலாங் கைகூ டின. இவவிராமா தேசஙகளையெலலாம அடைவது, மக் கடகே இலாபம. இவா அரசரா யிருககுமபொழுது, ஒரு வனும எபபொழுதும தனககு விருபபமலலாதவறறையும துககததையும பாரான" எனறிவ்வணணம புகழநது சொலவதையும கேடடார இராமா, மஙகள வார்த்தை யைக கூறும வநதிகள அநேக இராகஙகளால தமமைப புகழநதுபாட அவாகளுடைய பாடடுககளைக கேடடுக் கொணடு, தமது முனபு அழகான சததமிடடுககொணடு யானைகளுங குதிரைகளுஞ செலல, வாததியஙகள் முழஙக, குபேரனபோற போனா குதிரைகளும, பெண யானை களும, ஆண யானைகளும, இரதஙகளும நிறைநதிருககப் பெறறதும, மஹா ஜனககூடடஙகள நிறைநத சதுககஙகளை யுடையதும, மிகக இரததினஙகளையுடையதும, அனேக கடைபபொருளகள விளஙகபபெறறதுமான பெரியவழியை இராமா கணடார.

---

## பதினேழாஞ் சருக்கம் :
## இராமா தசரதரிருந்த இடத்தைச் சேர்தல்.

---

செல்வவானுன இராமா, தமது நேசாகளெலலா ருடைய மனமும களிககும வண்ணம இரதம ஏறி, பதாகை

களும கொடிகளும அசையப பெறறும, மிகச்சிறந்த தூபங்க ளால பரிமளித்துககொணடும, ஜனங்களால நிறைந்தும், வெண மேகததை நிகாதத மாளிகைகள இருபக்கங்களில் விளக்கமடைந்திருக்கப பெறறு முள்ள நகரத்தின் மத்தியில, வாசனை தூபம எழுமபிககொணடிருக்கும இராஜ வீதிவழியாகச சென்றா. உத்தமமான அந்த இராஜவீதி வெகு விசாலமாயும, வாசனை வீசிககொணடும, பட்டு வஸதிரங்கள விரிக்கப்பட்டும, துளையிடப்படாத நலல முத்துக்களினுலும உயாநத படிகங்களினுலும அலங்கரிக்கப்பட்டும, விதம விதமான பொருளகளையும பணணியாரங்களையுமுடைய கடைகளாற சூழப்பெறறும, ஆகாசத்திலுள்ள தேவேந்திர வீதி போல இருந்தது; அன்றியும், அங்கங்கே தயிா, அக்ஷதை, நெய, பொரி, அகில சந்தனம இவைகளினின்றும உணடான தூபம, நாநாவித மாலைகளினின்றும உணடான வாசனை இவைகளால பூஜிக்கப்பெறற நாறசந்திகளை உடையதுமாக இருந்தது. இராமா, ஆங்காங்குத தமமைக குறித்து நணபாகள கூறுகின்ற ஆசிகளைப பெறறுககொணடு, தாம எவரெவாக்கு எவ்வெவவிதமாகிய மரியாதை செயயவேணடுமோ அவவித மரியாதையைச செயபவராயச சென்றா. மக்களெல லாரும, இராமா இரதம ஏறிச சென்றபோது "இராகவரே, இன்றைத்தினம நீா அபிஷேகம பெறறு, உமமுடைய பாட்டனா முதலியோா எவ்வாறு எங்களைக காப்பாறறினாகளோ அவவாறு காப்பாறறக கடவீா. உமமுடைய பிதாவினுலும பாட்டனா முதலிய முனனோாகளாலும களிப்பிக்கப்பட்டு நாங்கள எவ்வாறு சுக மாக வசித்தோமோ, அதனினும மிகக சுகத்துடன நீா அரசராக இருக்குமபொழுது வசிப்போம. எங்களுக்கு இப்பொழுது ஒருவிதமான சுகததிலும விருப்பமிலலை. தந்தையாரிடமிருந்து இராசசியததை அடைந்த இரா

மா வெளியில வருமபொழுது பார்பபதினும விருபபத் திறகு இடமானது வேறொன்றுமிலலை" எனறும இன்னும் வேறுவிதமாகவும தமமைக கௌரவிககும வாாத்தை களை எவவிடததிலும நணபாகள சொலலிககொணடிருககக கேடடு விருபபுவெறுபபிலலாதவராயப போயககொணடி ருநதாா அவரைப பாாதத ஒவ்வொருவரும, அவா வெகு தூரம கடநதபொழுதும அவரைவிடடுத தமது கணகளை யும மனததையும பெயாத்து இழுததுககொளள முடியா மல நினறனா. எவன இராமரைப பாாககவிலலையோ, எவனை இராமா பாாககவிலலையோ, அவன் உலகத்திலுளள எலலாராலும நிநதிககபபடடவனாய வசிபபான: அவனைத் தனனுடைய ஆதமாவும நிநதிககும தருமாதமாவான இராமா விததியாசம எனபது சறறேனு மினறி எலலாச சாதியாரிடததிலும நான்குபருவஙகளையுடையவாகளிடத் திலும தயைசெயபவா; ஆகையால அவரை எலலாரும அநு சரிததிருநதாாகள இராமா தாம செலலும வழியிலிருநத நாறசநதிகள, தேவாலயங்கள, யாகசாலைகள, சபைகளமுத லியவைகளை வலஞ்செயதுகொணடு வழியைககடந்து,மேக மணடலமபோல ஆகாயததை அளாவிக கைலை மலையின் உசசிபோலவும விமானமபோலவும் விளஙகும் அனேகவித உபரிகைகளின் சிகரஙகளாலும இரததினஙகள் இழைத் துக கடடபபடடுவரும மாடஙகளாலும விளஙகுவதும இநதிரனுடைய மாளிகைபோல பிரகாசிபபது மாகிய தமது தநதையாருடைய அரணமனையை, மிகக காந்தியு டன விளஙகிககொணடு சோநதாா. இராமா தேரினின்று இறஙகி, அநத மாளிகைககுள, கையிலவிலலேநதிய காவற காராகளாற காககபபடடிருககும மூன்று கடடுக்களைக குதிரையினமேலேறிக கடநது, மற்றிரணடு கடடுககளை யுங் காலினால நடநது கடநது, பினபு எல்லா ஜனங களையும அனுபபிவிடடு, தநதையா ரிருககும அநதப

புரத்திற்குள் போனார். பின்பு, இராமர் தம்பப்னார் சமீபத்தைச் சேர, சமுத்திரராசன் சந்திரப்கவான் வரவை எதிர்பார்ப்பதுபோல வெளியிலிருந்த ஜனங்கள் அவ்விராமர் திரும்பி வரப்போகின்றதை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார்கள்.

## பதினெட்டாஞ் சருக்கம் :

## கைகேயி 'வனத்துக்குப் போகவேண்டும்' என்று இராமரிடஞ் சொல்லுதல்.

விலையுயர்ந்த ஒருஆசனத்தில் கைகேயியுடன் இருந்த தமது தந்தையாரது முகம் வெகுபரிதாபமான நிலைமையில் இருப்பதை இராமர் கண்டார். அவர், தமது தந்தையாரது சரணாரவிந்தங்களில் வெகு வணக்கத்துடன் முதலில் நமஸ்காரம் பண்ணி அதன் பிறகு வெகு மரியாதையுடன் கைகேயியின் பாதங்களில் வந்தனஞ்செய்தார். இவரைக் கண்டவுடன் எளிய தசரதர், "ஏ ராம!" என்று சொல்லி, நீர் நிரம்பிய கண்களையுடையவராய் இவரைப் பார்த்தற்கும் பேசுதற்கும் வல்லவராகவில்லை. ஒரு நாளிலும் அவ்வாறு இராத தமது தந்தையார் அன்று அவ்வாறு இருந்ததையும், மனத்தில் பயத்தை உண்டாக்கும் அவருடைய உருவத்தையும் கண்டு இராமர், காலினால் ஒரு சாபத்தை மிதித்தவர்போல நடுங்கிவிட்டார். மிக்க துன்பமடைந்த இந்திரியங்களினால் அதிகமாய்ப் பொங்குந் துக்கத்தீயால் வாடியும், அடிக்கடி பெருமூச்சு எறிந்துகொண்டும், நொந்து குழம்பிய மனத்துடன் கூடியுமிருந்த தந்தையாரான தசரதமகாராஜா, கலங்குந்தன்மை யறியிருந்தும் கலக்கமடைந்த கடல்போலவும், இராகுவாற் பிடிக்கப்பட்ட சூரியன்போலவும், பொய்யைச் சொல்லிவிட்டு

மனங் கலங்கிநிற்கும் மாமுனிவர்போலவும் இராமருக்குத் தோன்றினார். இராமர், காரணந் தோன்றாத தசரதருடைய சோகத்தை நினைத்து, பருவகாலத்திற் கடல் பொங்குவதுபோல துக்கத்தால் மிகப்பொங்கினார். அன்றியும், இராமர், எப்பொழுதும் தமது தந்தையாருடைய க்ஷேமத்தையே விரும்பியவராகையால், தமக்குள்ளேயே 'என் தந்தை இன்றைக்கு என்னைப்பார்த்து ஏன் ஆனந்திக்கவில்லை? என்னைக்காணாதபொழுது கோபித்துக்கொண்டிருந்தபோதிலும் என்னைக்கண்டவுடன் தமது கோபத்தை மறந்து புன்னகையோடு அன்பாக இருப்பரே! அப்படிப்பட்ட இவருக்கு இன்றைக்கு என்னைக் கண்டவுடன் வருத்தம் வரவேண்டிய காரணம் என்ன?" என்று எண்ணினார்.

*தசரதரின் மெய்யைக்கண்டு இராமர் வருந்தல்*

இராமர், பின்பு ஏழைபோற் சோகத்தால் வருந்தி முகத்தின் ஒளி குறையப்பெற்று, கைகேயியை நமஸ்காரம் பண்ணி, அவளைப்பார்த்து, "அறியாமையாலேனும் நான் எனது தந்தைக்குக் குற்றம்பண்ணினதில்லையே! ஏன் என் தந்தை கோபித்துக்கொண்டிருக்கிறார்? அதைச் சொல்லும் அவரைச் சமாதானப்படுத்தும். எப்பொழுதும் என்னைக் கண்டால் ஆசையுடன் இருப்பவர், இப்போது ஏன் இவ்வாறு மனக்கலக்கமுடையவராய் இருக்கின்றார்? இவர், என்னைக் கண்டும் முகம் வாடிப் பரிதபித்துக்கொண்டு ஏன் பேசாமல் இருக்கிறார்? இவர் தேகத்தை நோய் வருத்துகின்றதா? இவருக்கு மனவருத்தம்உண்டாக ஏதேனுங் காரணம் உண்டா? சுகமென்பது எப்பொழுதும் ஒருவனுக்கு ஒரேவண்ணமே இருந்துகொண்டிருக்குமென்பது வெகு அருமை. அழகிய தோற்றத்தையுடைய பரதன், மிக்க வலியுள்ள சத்துருக்கனன், என்னுடைய தாய்மார்கள் ஆகிய இவர்கள் குறைவின்றி இருக்கின்றனரா? என் தந்தையாரின் மனத்திற்கு மகிழ்ச்சியை உண்டாக்காம

*இராமர் கைகேயியை விசாரித்தல்*

லும, அவருடைய சொறபடி நடவாமலும், அவா எனமேற கோபிககவும நான் ஒரு இமைபபொழுதும பிழைததிருகக மாட்டேன. தன் கணணுககுபபுலனுகுந தனது தோறறத திறகுக காரணமா யிருககுந தநதைககு விரோதமாக எவ ஞயினும நடபபாரே? அலலது, அமமா, நீர கோபததினு லாவது செலவாககினுலாவது பிதாவைபபாாததுக கடிநது பேசினபடியால அவாமனம இவவாறு குழபபம அடைந திருககினறதா? யாது காரணம? தெரியவிலலையே! இந தப்பூபாலருடையமனமானது இவ்வாறு இதுவரையுமினறி இனறைத்தினம ஏன் குழமபிநிறகினறது? இதை உண மையாகச சொல்லும" என்று வினுவினா. மகாததுமா வாகிய இராமா இவவணணங கேடக, கைகேயி, சற றேனும வெடகமிலலாமல தனககு நனமையைத தரும மொழியைக கமபீரமாகச சொலலத தொடஙகினள். "ராம, அரசருககு ஒருவிதகோபமும இலலை அவருககுத் துககமும இலலை. ஆனல அவருடைய மனததில ஒனறிருக கினறது. அதை உனககுப பயநது வெளியிடாதிருககின் ரூா. எபபொழுதும உன்னிடத்தில அதிக அனபாயிருநது இபபொழுது அனபறற சொலலைச சொலலுவதறகு அவருடைய நா எழவிலலை. எனககுத் தசரதா வாககளித்திருககினரூர். அதை நீ அவசியம் முடிததுக கொடுக்கவேணடுமே. உன தநதை முனனொருகால எனனைக கௌரவிதது எனககு "வரத்தைககொடுத்தேன" என்றுசொலலிவிடடு, இபபொ ழுது சாதாரணமான மனிதனபோல பசசாத்தாபபபடுகி ரூர். இவவெட்டுத் திசைகளையும் தமககுள அடககி ஆளு கினற மன்னவர், நான வரம் கேடக "கொடுத்தேன" என்று முதலிற சொலலிவிடடு, இபபொழுது, வெளளம் கடநதுபோன பின்னர் அணை கோலுகினரூா. ராம, 'சத் தியம் தருமத்திற்கு மூலம்' என்பது எலலாரும அறிநத விஷயமே. ஆகையால, 'உனககுக கேடாக முடிகினறது'

கைகேயிவார்த்தை

என்று என்மேற் கோபங் கொண்ட மன்னவர் சத்தியத்தைத் தவிராதவாறு செய். அரசர் உன்னைப்பார்த்துச் சொல்லப் போகின்றது, உனக்கு நன்மையைத் தருவதோ தீமையைத் தருவதோ, எப்படி யிருந்தாலும், அரசர் சொல்லை வீணாக்காமல் அவசியம் செய்வேனென்று நீ ஒப்புக்கொள்ளுவாயாகில், நானே அதைச்சொல்லுகின்றேன். அவர் ஒருபொழுதும் உன்னிடத்திற் சொல்லமாட்டார்" என்றாள். இவ்வாறு இவள்சொன்னதைக்கேட்டு, இராமர், மிகவும் மனம் நொந்து, தமது தந்தையாருடைய எதிரில் அவளைப்பார்த்து, "சீ! சீ!! என்னைப் பார்த்து இவ்வாறு நீர் சொல்லக்கூடாது. என்னை 'நெருப்பில் குதி' என்றாலும் உடனே குதிப்பேன். 'விஷத்தைக் குடி' என்றாலும் குடிப்பேன். 'சமுத்திரத்தில் முழுகு' என்றாலும் முழுகிவிடுவேன். என் பிதாவின் கட்டளை என்றால் எனக்குப்போதும்.

இராமர் உடன்பாடு.

அவர் எப்பொழுதும் எனக்குக் குரு; தந்தை; அரசர்; எனது க்ஷேமத்தையே விரும்புபவர்; ஆகையால், அம்மா, தந்தையாருடைய கருத்தைச் சொல்லும்: அவசியம் நான் செய்து முடிக்கிறேன். பிரதிஜ்ஞை செய்கின்றேன். இது வரையிலும் இராமன் இருவகையாகச்சொன்னதேயில்லை" என்றார். நேர்மை யுடையவரும் சத்தியத்தைக் கூறுகின்றவருமான இராமரைப் பார்த்து, மகாபாவியாகிய அந்தக் கைகேயி, தனது எண்ணத்தை வெளியிடுபவளாய், "முன்னொரு காலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் உண்டான சண்டையில் பாணத்தால் புண்பட்ட உனது தந்தையாரை நான் காப்பாற்றினபடியால், அவர் எனக்கு இரண்டுவரங்கொடுத்தார். அவைகளில் ஒன்றால் 'பரதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்துவைக்கவேண்டும்' என்றும், இரண்டாவதால் 'இன்றைத்தினமே இராமன் தண்டகாரணியத்திற்குப் போகவேண்டும்' என

இராமரைக் கைகேயி காட்டிற்குப் போகச் சொன்னது

றும் கேட்டுக்கொண்டேன். நீ, உன்னையும் உனது தந்தையையும் உண்மையில் நடப்பவர்களாகச் செய்யவேண்டுமென்று எண்ணினாயாகில், நான் சொல்லுகின்ற வண்ணம் செய்யக்கடவாய். உனது தந்தையாரின் சொற்படி நீ பதினான்கு வருஷம் தண்டகாரணியத்திற்குச் சென்று அங்கிருக்கக்கடவாய். உனது அபிஷேகத்திற்காக வந்திருக்கும் பொருள்களினால் பரதனுக்கு அபிஷேகத்தை நடத்த இசைவாய். அபிஷேகத்தை விட்டுப் பதினான்கு வருஷகாலம் நீ தண்டகாரணியத்தில் உனது தலைமயிரைச் சடைகளாகத் திரித்துக்கொண்டும், மான்தோல் உடுத்துக்கொண்டும் வாழ்ந்து வரக்கடவாய். சகலவித ரத்தினங்களும் நிறைந்து, குதிரைகள், இரதங்கள், யானைகள் இவைகளுடன் கூடிய இப்பூமியைப் பரதனே இந்தக் கோசலநாட்டில் அரசாளட்டும். இவ்விரண்டு வரங்களைக் கொடுத்த காரணத்தினாலேதான் மன்னர், பரிதபித்துக் கொண்டு துக்கத்தால் முககாந்தி குன்றி, உன்னைக் கண்ணெடுத்துப் பார்ப்பதற்கும் மனம் பொறாதவராக இருக்கின்றார். தசரதருக்குப் பிள்ளாய், நீயும் உனது தந்தையாரின்சொற்படி நடந்து, அவரையும் சத்தியத்தின் கரையை அடைந்தவராகச் செய்துவைப்பாயாக'' என்றனள்.

இவள் இவ்வண்ணம் வெகு கடினமாகச் சொன்னதைக் கேட்டு இராமர் சற்றேனுந் துக்கப்படவேயில்லை. ஆனால், மகானுபாவரான அவருடைய பிதாவாகிய தசரதர், 'இவள் சொன்னதைக் கேட்டுத் தமது புத்திரன் தம்மைவிட்டுப் பிரிந்து போகின்ற சமயம் வந்துவிடும்போல இருக்கின்றதே!' என்று நினைத்து முன்னையினும் அதிகமாக வருந்தினார்.

*தசரதர் வருந்தம்.*

# பத்தொன்பதாஞ் சருக்கம்:
# கைகேயியின் சொற்படி காட்டிற்குச் செல்ல இராமர் சம்மதித்தல்

---

இவவிதமாக மரணததுககொபபான கடுஞசொற்களாக கைகேயி சொலலக கேட்டு, பகைவெலலும் வலி படைதத இராமா, சறறும வருததமடையாது, அவளைப பாாதது, "பரதனுக்குப பட்டாபிஷேகம நடககட்டும. நான் எனது தநதையாா உமககு வாககுக கொடுத்தபடி தலைமுடியை ஜடையாகத் திரிததுககொணடும மானதோல் உடுததுககொணடுமவசிகக, இவவிடததைவிட்டுக காட்டிற்குப போகினறேன. ஆனால், இது மாததிரம எனககுத் தெரியவேணடும, பிறரால வெலலவ அரியராயும பகைவரை வேருடன களைபவராயுமிருககும அரசா எபபொழுதும போல ஏன் எனனிடம மகிழநதிருககவிலலை? நீா எளிமையடைய வேணடாம் உமது முன்பாக நான் அவசியம காட்டிறகுசசென்று ஜடைதரிதது மரவுரி யுடுத்து வசிககினறேன நீா மகிழசசியடையும. எனககு நனமை செயபவராயும, பிதாவாயும, நனறியறிநதவராயும, குருவாயும், அரசராயுமிருககும இவரால் விருபபத்தோடு ஏவபபடின, நான எதைத்தான அசசமினறிச செயயமாட்டேன்? இது ஒன்று'தான என மனததை மிகவும வருத்துகினறது, எனனிடததில நேராக என தநதையாா 'பரதனுககுப பட்டாபிஷேகஞ செயதுவைககவேணடும' என்று என சொலலககூடாது? நானே சீதையையும இராச்சியததையும விருபபததிறகிட்டுஞ உயிரையும பொருளையும ஒருவருடைய ஏவலுமிலலாமல மனமுவநது எனது சகோதராகளுககுக கொடுததுவிடுவேன உமது வாககைக காககுமபடி உமமுடைய வேணடுகோளை நிறைவேறறிவைககும்

இராமா காட்டிறகுசசெலலச சம மதிததல

பொருடடு அரசா எனனை ஏவினால பரதனுககுநான்கொடுப பதைப்பறறிக கேடகவேணடுமோ? ஆகையால், நீா இனி அரசரைத தேறறிவைபபீராக. எதறகாக அவா தலை குனிநது தரையில தாரையாகககணணீாவடிககவேணடும? தூதாகள அரசருடைய கடடளையால இபபொழுதே அதிவேகமாகசசெலலுங குதிரைகளிலேறி மாமனவீடடிலிருநது பரதனை அழைததுவரச செலலடடும இககணமே நானும ஆலோசியாமல இஙகிருநது தணடகாரணியததில எனது தநதையாா ஆஜஞைபபடி பதினானகு வருஷகாலம வசிககச செலகின்றேன" எனறாா.

இதைககேடடுக கைகேயி, இராமா காடடிறகுப போய விடுவாா என்ற நமபிககையால களிபபடைநது, அவரை விரைவிற போகுமபடி சொலலலுறறாள். "ராம, ஆகடடும்; பரதனை மாமனவீடடிலிருநது விரைவில அழைதது வர, வெகுவேகமுளள குதிரைகளினமேல இககணமே தூதாகள போகினறாாகள. நீயும இவவளவு ஆவலுடன இருபபதால தாமதிககாமற சீககிரங காடடிறகுப போ.

கைகேயி விரைவு படுததுதல

அரசா வெடகததினால உனனிடததிற பேசுதறகு மனம எழாமல இருககின்றாா. இதறகு வேறுகாரணஞ சிறிதுமிலலை. ஆகையால இதைபபறறி நீ கவலைபபடவேணடாம. நீ இநத நகரை விடடுக காடடிறகுப போகினற வரையில உனது தநதையாா ஸநானஞ செயயமாடடாா; போசனமுஞ செயயாா" என்று இவவாறு சொனன கைகேயியின அசததியமான வாாத்தையைக கேடடுத் தசரதா, 'எனககு எனன கஷடம!' எனறுசொலலிப பெருமூசசெறிநது பரிதபிதது மூாசசை அடைநது, பொன்னால் அலஙகரிககபபடட கடடிலில விழுநதாா.

இராமா, அவரை உடனே எடுதது இருததி, உயாநத குதிரையைச சமமடடியால அடிததால அது ஓடுதறகு

எவவளவு விரையுமோ அதுபோல கைகேயியினது சொல லெனறசமமடடியால காடடிறகுசசெலல விரைந்து, அவள சொலலிய கடினமாயும அபபிரியமாயுமுளள சொறகளாற சறறேனும மனவருதத மடையாது, அவளைப பாாத்து, "அமமா, எனனைப பொருளாசை கொணடு உலகததில் வாழதறகு எணணங கொணடவனாக நீா நினைககவேண டாம தருமம என்பதையே எபபொழுதுங கைபபற்றி யிருககினற எனனை ரிஷிகளொபபானவன் என்று எணணு வீா. எனது தநதைககு மகிழ்சசியை விளைவிககப பிராண னைக கொடுககவேணடுமெனறாலும அவவணணமே செய வேன இவவுலகத்தில ஒருவனுககுத தநதையாரிடத்துப பணிநது பணிவிடைசெயது அவரது சொறபடி நடபபதி லும உயாநத தருமம வெறெனறும இலலை நான அவர் சொலலாமலிருநதாலும உமது சொறபடி ஜனஙகளற்ற காடடில பதினனகு வருஷம வசிபபேன. அமமா, கை கேயி, எனனை அடிமைபோல ஏவ உமககு அதிகாரமிருந தும 'பரதனுககு அபிஷேகஞ செயயவேணடும' என்று அரசரிடததிற கூறினீா. ஆதலால, எனனிடததில நீா பணபு உளளதாகக கருதவிலலைபோலும. நான், எனது தாயாராகிய கௌசலையிடம விடை பெறறு, சீதைககு சலவாாததை சொலலிவிடடு, இபபொழுதே தணடகா வனததிறகுப போகிறேன; விரைவிற பரதன இராசசியத் தை யடைநது பிதாவுககுப பணிவிடைகளைச சரியாய் நடத்திவரும்படி நீா செய்வீா. இதுதான் என்றும அழி யாத தருமம" என்றாா.

இவ்வாறு இராமர் சொன்னதைக கேடடுத தசரதா, சிறிதும பொறுக்கக்கூடாத துககததினல் வாயவிடடுப பேச வாா எழாமல உரத்த சதத்துடன் அழுதாா. மிகக ஒளியையுடைய இராமா, மனமயஙகிய தசரதரையும நீதி

இராமர் தந்தையை விட்டுப் புறப்படுதல்.

யற்ற கைகேயியையும் வலம்வந்து நமஸ்காரஞ்செய்து அவ்வந்தப்புரத்தைவிட்டு வாயிலில் வந்தவுடன் தமது சிநேகிதர்களைக்கண்டார். சுமித்திரைக்கு ஆனந்தத்தை வளர்ப்பவரான லக்ஷ்மணர் வெகு சினங்கொண்டவராய் நீர் ஒழுகுங் கண்களுடன் அவ்விராமர்பின்னே நடந்துபோனார் இராமர், அபிஷேகத்திற்குரிய பொருள்களெல்லாம் நிறைந்திருந்த மண்டபத்தை வலம்வந்து அதிற் கண்வைக்காமல் பரதனுடைய பட்டாபிஷேகத்தைப் பிரார்த்தித்தவராய் மெல்ல நடந்தார். உலகத்திலுள்ள ஜனங்களெல்லாருக்குங் குளிர்ந்தவராயிருக்கும் இராமருக்கு உண்டான இராசசியநஷ்டமானது, சந்திரனுடைய ஒளியை இரவு குறைக்காததுபோல், அவர் முகத்தில் விளங்கிய ராஜலக்ஷ்மியின் அழகைக் குறைக்கவில்லை. இராசசியத்தை விட்டுக் காட்டிற்குப் போய்விடுவதால், அவருடைய மனத்தில், யாதொருவிகாரமும் துறவிக்கு எவ்வாறு தோன்றாதோ அதுபோலத் தோன்றவில்லை. தம் மனத்திலிருக்கும் வருத்தத்தை ஒருவாற்றானும் வெளியிற் காட்டாத இராமர், சுபமான குடை, அலங்கரிக்கப்பெற்ற சாமரை இவைகளை அகற்றி, தேர், தம்முடன்வந்த அன்பர்கள், நகரத்தார், மற்றுமுள்ள சாதாரண ஜனங்கள் இவர்களெல்லாரையும் அனுப்பிவிட்டு, கேட்பதற்கு வருத்தத்தை யுண்டாக்குஞ் சங்கதியைத் தமது தாயாருக்குத் தெரியப்படுத்த அவள்மாளிகைக்குப் போனார்.

இராமர் கௌசல்யையின் மனையிற் புகுதல்

நான்கு பக்கத்திலுமிருந்த செல்வவான்களான ஜனங்களுள் ஒருவராவது, சத்தியவாதியாயும் காந்தியுடையவராயுமிருக்கும் இராமரது முகத்தில் ஒருவிதமான விகாரத்தையும் அறியவில்லை சரத்கால சந்திரன் இயற்கையான காந்தியை விடாதவாறுபோலத் தமது இயற்கையான மகிழ்ச்சியை இராமர் ஒரு சமயத்திலும் இழக்கவே இல்லை. இயல

பாகவே தைரியமுள்ள இராமா, தமது மதுரமாகியவாக்கி ஞல ஒவவொருவரிடமும மரியாதையாகப பேசிககொண டே தமது தாயாரின் சமீபததிற புகுந்தா. ஒவவொரு குணததிலும அவருககு ஒபபானவரும மகாவீரருமான லக்ஷமணரும, தமது துககததை அடககிககொணடு அவா பினனே சென்ரு. இராமர், புகுநது, அஙகிருநத ஆனந தத்துடன கூடிய ஜனஙகளேயும, தமககுவந்திருககுந துன பததையும ஆலோசிததது, 'தமது நணபாகள துககபபடடுப பிராணனே விடடிடுவாாகளோ!' என்ற அசசததால ஒரு விதமான விகாரததையும அடையாதிருந்தா.

## இருபதாஞ் சருக்கம் :
## கௌசல்யாதேவியின் விலாபம்.

ஆணசிஙகமபோன்ற அநத இராமா தமது கைகளேக கூபபிககொணடு கைகேயியினுடைய அநதபபுரததை விடடு வெளியில வநதவுடன, அநத அநதபபுரததில தீனமான ஒரு பெரிய சத்தம எழுமபிறறு:—"ஐயோ! இவவநதப புரம முழுவதுககும கதியாயும, சரணமாயு மிருககும இராமா தமது பிதா சொலலவேணடுமென்பதே யினறி இன்றைத் தினம நகரைவிடடு வெளியேபோகின்ரு. ஐயோ! பிறநததுமுதல இராமா, தாயாகிய கௌசலையையிடம எவவாறு வணககமாக இருககின்ருரோ, அதே விதமாய எஙகளிடத்தும இருககின்ருரே! கொடுமையாகச சொன்னுலும சிறிதும கோபங கொளளாமல, கோபத திறகுக் காரணஙகளேக கைவிடடும், கோபிததிருபபவா கனேச சமாதானபபடுத்தியும வரும இராமா, இன்றைத தினம காடடிறகுப போகின்ருரே! நிசசயமாக நமது அரசருககு அறிவே அழிநதுவிடடது. அரசா, எலலாப பிராணி

அநதபபுரம புலமபுதல

களுககும ஓரே பறறுககோடாயிருககினற இராகவரைக கைவிடுகினருா என்றுல இனி உலகஙகளை யெலலாம நாசஞ்செயவாா."

இவ்வாறு அஙகிருநத தசரதருடையமனைவிமாரெல லாரும, கனறை இழநத பசுககள கதறுமாறுபோலக கதறி, அரசரை நிநதிததாாகள. தசரதா, அநதபபுரத தில இவவாறு வெகு பரிதாபமாயக கதறுகினறதைக கேடடு, முனனரே புததிர சோகததில ஆழநதிருககை யால தமது படுககையோடு படுககையாகக கிடநதாா.

இஙகிவவாறிருகக இராமா, இவவநதபபுரததுத துக கததால துனபமுறறவராய அதை வெளிககாடடாமல, ஒரு யானைககுடடி போல பெரு மூசசெறிநதுகொண்டு, தமபியாகிய லக்ஷ்மணருடன தமது தாயாருடைய அநதப புரததை அடைநதாா, அதன் வாயிலில முதுமைபபருவ முளளவனும மரியாதை பெறறவனுமான ஒரு வாயில் காபபானும இன்னும அனேகரும் இருககக கணடாா. அவாகளெலலாரும இராமரைக கணடவுடன எழுநது "உமககு எநநாளும வெறறியுணடாககடவது" என்று வாழததினாாகள. முதற கடடடததைக கடநத இராமா, இரண்டாஙகடடில, அரசரால மரியாதை செயயபபடட வாகளும வேதத்தினகரையைக கண்டவாகளும முதிய வர்களுமான அநதணாகள இருககக கணடு, அவாகளை வணஙகி, மூன்றுஙகடடிற புகுநதாா அநதபபுரததைக காத்துககொணடு நினற சிறுமியரும, கிழவிகளும, இராமா அஙகுவரககண்டு களிபபடைநது வாழ்ததி, விரைநதோடி,

கௌசலையை நோறகும நோனபு.

அதை இராமருடைய தாயாராகிய கௌச லைககுத் தெரிவித்தாாகள். எபபொழுதும விரதத்தைக கைககொணடவளும மங்க ளத்தைச் செயபவளுமான கௌசலை, தனது புத்திரனுடைய நன்மையை நாடி, இரவு முழுதும

நியமத்தோடிருந்து, காலையில் ஸ்ரீமந்நாராயண மூர்த்திக்குப் பூஜைசெய்து, மௌனமுள்ளவளாய், வெண்பட்டு உடுத்து, அக்கினியில் மந்திரத்தோடு பிராமணரைக்கொண்டு ஹோமம் பண்ணிக்கொண்டிருந்தாள். இராமர், அங்கு ஓமஞ் செய்துகொண்டிருக்குந் தாயாரைப் பார்த்தார். தெய்வங்களை ஆராதிக்கும் பொருட்டுத் தயிர், அக்ஷதை, நெய், மோதகங்கள், அவிசு, பொரி, வெண்மையாகிய மாலைகள், பாயஸம், எள்ளுடன் சேர்ந்த சோறு, சமித்து, பூர்ணகும்பங்கள் ஆகிய இவைகள் அவளது சமீபத்தில் சித்தமாக இருக்கவும், வெண்பட்டு உடுத்துக்கொண்டும், விரதாநுஷ்டானத்தால் தேகம் வாடியும், தேவதாசரீரம் போன்ற மேனியைப் பெற்றும் இருக்கும் அக்கௌசலையை தனது இஷ்டதேவதையை நீரால் திருப்தி செய்வித்துக் கொண்டிருக்கவுங் கண்டார். அவள், தனக்கு எப்பொழுதும் ஆனந்தத்தையே கொடுக்கின்ற தனது அருமைக் குமாரன் வருவதைக் கண்டு, ஒரு பெண்குதிரை தனது இளங்குட்டியைக் கண்டாற்போல், வெகு சந்தோஷத்துடன் இராமருக்கு எதிராகச் சென்றாள்.

கௌசலையை இராமரைப் பாராட்டல்

தமது தாயைக் கண்டவுடன் இராமர், அவளுடைய பாத கமலங்களில் அபிவாதனம் பண்ணினார். கௌசலையும் அவரை அணைத்து உச்சிமோந்து பகைவரால் அணுக ஒண்ணாத பலத்தையுடைய தன் புத்திரரான அவரைப் பார்த்து, வெகு பிரியமாயும் இதமாயுஞ் சொல்லலுற்றாள். “என் குழந்தாய், நீ வெகு தருமவான்களும், முதியவர்களும் மகான்களுமான இக்குலத்துதித்த இராஜரிஷிகளுடைய ஆயுளையும், கீர்த்தியையும், அறத்தையும் அடைவாயாக! உனது தந்தையாரைச் சொல்தவறாதவராக அறி. அந்தத் தருமபரர்வானவர், இன்றைத்தினமே உன்னை இராச்சியத்தில் இளவரசனாகப் பட்டாபிஷேகஞ் செய்து

வைக்கப்போகின்றாரா" என்று சொல்லி இராமர் இருத்தற்கு ஒரு ஆசனம் இட்டு அவரைப் போஜனத்திற்கு அழைக்க, இராமர் வெட்கித் தமது கைகளைக் குவித்துக் கொண்டு ஆசனத்தைத் தொட்டுச் சொல்லலானார்.

இராமர் தமக்கு வந்த வனவாசத்தைத் தாயிடம் தெரிவித்தல்

இயற்கையாகவே வெகு வணக்கமுள்ளவரானகையாலும், தமது அன்னையிடத்தில் தாம் வைத்த திருந்தகௌரவத்தினாலும், இராமர், மிக்க வணக்கத்துடன், தண்டகாரணியத்திற்குப் பிரயாணப்பட்டவராய் விடைபெற்றுக்கொள்ள ஆரம்பித்தார். "அம்மா, இப்பொழுது வந்திருக்கும் பயம் இன்னும் நிச்சயமாகத் தெரியாது. இப்பயம் உமக்கும் சீதைக்கும் லக்ஷ்மணனுக்கும் அதிகமாகத் துக்கத்தைத் தரும். நான் தண்டகாரணியத்திற்குச் செல்லப் போகின்றேன். எனக்கு இந்த ஆசனம் எதற்கு? இனி நான் இருக்கவேண்டியது, முனியோடிருக்கும் இருபத்தைந்து தருப்பைகளாற் செய்த முனிவனுக்குரிய ஆசனத்திலன்றோ! நான், ரிஷிபோல் மாமஸத்தை நீக்கிக் காய், கிழங்கு, தேன் இவைகளை உணவாகப் புசித்துக்கொண்டு, மநுஷ்ய சஞ்சாரமற்ற காட்டில் பதினான்கு வருஷம் வசிக்கப்போகின்றேன். மகாராஜா, பரதனுக்கு இளவரசுப்பட்டத்தைக் கொடுத்து என்னைத் தண்டகாரணியத்தில் ரிஷிபோல் வசித்திருக்கக் கட்டளையிட்டார். ஆகையால், நான், ஜனங்களில்லாத காட்டில் ஆறெட்டு வருஷம் வானப்பிரஸ்தர்களுடைய அநுஷ்டானத்தைக் கைக்கொண்டு, காய் கனிகளைப் புசித்துக்கொண்டு, வசிக்கப்போகின்றேன்" என்றார்.

கோசலையின் துக்கம்

அவள், அதைக் கேட்டவுடன், காட்டில் கோடரியால் வெட்டப்பட்ட ஆச்சாமரத்துக் கிளைபோலவும், ஆகாயத்தினின்று தவறி வீழ்ந்த தேவதைபோலவும் பூமியில் திடீர் என்று

விழுந்தாள். இராமா, ஒருநாளும் துக்கம் என்பதையே அறியாதவளான தமது தாயார் வாழைமரம் போல விழுந்து அறிவு போயிருக்கப் பார்த்து அவளைத் தூக்கி, பாரஞ்சுமக்குங்குதிரை பூமியிற் புரண்டால் அதன் தேகம் எவ்வண்ணம் இருக்குமோ, அவ்வண்ணம் அவளது தேகம் புழுதி படிந்திருக்கக் கண்டு அதனைக் கைகளால் துடைத்தார். பின்பு, சௌக்கியத்தையே அநுபவிக்கத் தக்கவளாயும் துக்கத்தால் மெலிபவளாயுமிருக்கும் கௌசலை, வீற்றிருக்கும் இராமரைப் பார்த்து, லக்ஷ்மணரும் கேட்கும் வண்ணம் சொல்லலுற்றாள் "என் மைந்த, ராகவ, நீ எனக்குத் துக்கம் விளையும்படி பிறவாமலே இருந்தால், பிள்ளைபெறாத நான், பிள்ளையின்மையால் உண்டாகும் துக்கத்தைவிட வேறு துக்கத்தைக் காணாமல் இருக்கலாம் பிள்ளாய், புத்திரப் பேறு அற்றவளுக்கு ஒரே துக்கம். அதென்னவென்றால், 'புத்திரனில்லை' என்பதுதான். அதைப்பார்க்கிலும் வேறு ஒரு துக்கமும் அவளுக்கு இல்லை. கணவருடைய அநுகூலத்தினாலே உண்டாகுஞ் சிறப்பையும் சௌக்கியத்தையும் முன்னர் ஒருபொழுதும் நான் கண்டதேயில்லை ராமனாலாவது சுகத்தைக் காணலாமென்று நினைத்திருந்தேன் எல்லாரினும் பெரியவளாக இருந்தும் ஒருநாளுஞ் சுகத்தையே கண்டிராத நான், கணவரின் கருத்தைக் கெடுக்கின்றவர்களும் என்னிலும் இளையவர்களுமான சக்களத்திகளுடைய மிக்ககொடிய வார்த்தைகளைக் கேட்க வேண்டியவளாகப் போகின்றேனே! இதைவிட ஸ்திரீகளுக்கு மிக்க துயரை விளைப்பது என்ன இருக்கிறது? எனது சோகமும் அழுகையும் என்றும் அளவிட அரியனவாய்க் கரையில்லாமல் இருக்கின்றன. நீ இங்கு இருக்கும்போதும் இத்துயரம் இருப்பினும், அது உன்னாலே மறைக்கப்பட்டிருந்தது. குழந்தாய், நீ புறப்பட்டுப்போன பின்பு உண்டாகுபவற்றைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? ஆகையால் எனக்கு

மரணம என்பது நிசசயம. பாததாவினுல அவமதிககப பட்ட யான் தலைமையை இழநதேன, கைகேயியின் வேலைககாரிகளோடு ஒததவளாகச செயயபபட்டேன்; அன்றி, அவாகளுககுந தாழவான நிலைமையில கருதப பட்டேன். இது வரையிலும எனககு அடஙகிய பணி விடை செயதவாகளும, பரதன் பட்டததிறகு வநதபின் னா என்னைபபாாததுப் பேசவும மாட்டாாகளே! புதல வனே, கதியறற நான், எபபொழுதும மிகக சினததோடு கடிந்து பேசுங குணமுளள கைகேயியினது முகததை எவவாறு பாாபபேன்? உனககு உபநயனஞ செயதபினனர் இநதப பதினேழு வருஷஙகளாக "எபபொழுது என் னுடைய துக்கம போகபபோகின்றது? எபபொழுது உன் னுடைய பட்டாபிஷேகததை நான் காணப போகின் றேன" என்று காத்திருநதேன். இவவளவு முதுமைப் பருவததை அடைநத எனனுல, இநதத தீராத் துககததை யும சககளததிகளின அவமதிபபையும இனி ஒரு கண மேனும பொறுககமுடியாது. பூாணசநதிரனுககு ஒபபான உனது முகததைக காணுது பேதைபோல நான் எவவாறு வாழவேன்? பாககியமறற நான, பயனறற உபவாசம தவம விரதம் இவைகளை அநுஷ்டிதது உனனைபபெற வெகு கஷ்டபபட்டேன. என்மனம, காாகாலததுப புதுவெளளத் தால தாககபபட்ட நதியினகரை உடைவதுபோல, துககத் தாறபினவாததனுல, வெகுகடினமானது! எனககு மரணமே இல்லை; யமலோகததில எனககு ஒருசாண இடமுமஇலலை; ஏனெனில, பயததால அலறிககொணடிருககும ஒருமா னைச் சிஙகம் வலிய இழுததுபபோவதுபோல, இன்றைத் தினமே யமன என்னை இழுத்துப போகவிலலை யன்றே! இநதத துக்கததைக கேட்டுப பிளவுபடாததால, எனது நெஞசு வெகு உறுதியானது; நாசமறறது. எனது தேக மும, கீழேவிழுநது சிறிய தூளாகாததால, இருமபினுல ஆனது. 'போகின்றவேளை வநதாலன்றிப பிராணன் போ

காது' என்பது திணணம. புததிரனை அடைய நான செயத விரதஙகளும, தானஙகளும, தியானங்களும,தவமும, உவர் நிலததில விதைதத விதைபோல பயனறறவையாயின எனற இநதத் துககநதான் எலலாத துககஙகளினும இப பொழுது எனக்கு வெகு அதிகமான துககம. மிகக துக்கம அடைநத ஒருவா தாமவிருமபியகாலததில் மரணததை அடையக கூடுமானல, கன்றை விடடுப பிரிநது பசு வருந் துவதுபோல வருநதாமல நான் இககணமே யமலோகஞ் சென்றுவிடுவேன். சந்திரனை ஒத்த முகததையுடைய வனே, நீ இன்றி இனி நான் பிழைததிருபபது வீண். வலி யறற பசு தனது இளஙகன்றைத் தொடாவதுபோல அன் பினல உன்னுடன் நானும காட்டிறகு வருகிறேன்'' என இவ்வணணம் பலவாறுகக கௌசலை, ஒரு கின்னரிபோல, இராமாபிரிநதுபோவதால உணடாகிய பெரிய துககத்தை நினைத்துப புலமபினள்.

---

## இருபத்தோராஞ் சருக்கம்:

## லக்ஷமணருடைய கோபம்.

---

இவ்வண்ணம் வருநதுகின்ற இராமருடைய தாயா கிய கௌசலையைப பார்த்து, லக்ஷ்மணா, பரிதபிக்கும் அக் காலத்திறகுத் தககபடி பின்வருமாறு சொல்லலுறறார்:— "அமமா, இராமா பெணசொறகேட்டு இராச்சிய லக்ஷ்மி யை விட்டுக காட்டிற்குப போகின்றது எனக்குஞ் சமமதம அன்று. மனந் தடுமாறியும, முதுமைப பருவ மடைந்தும உலகவின்பஙகளில முழுகியு மிருககும அரசா, மன்மத னுக்கு அடிமைபபட்டிருககிறபடியால எதைததான்சொல்ல

மாட்டார்? நாட்டை விட்டுக் காட்டிற்கு அனுப்பிவிடும் படியான தோஷமாவது குற்றமாவது இராமரிடம் என்ன இருக்கின்றது? இராமருடைய கொடிய பகைவர் அல்லது இராமரால் ஊரைவிட்டு நீக்கப்பட்டவர் ஆகிய இவர்களை விசாரித்துப் பார்த்தால் அவர்களும், 'இராமரிடத்திற் குற்றம் உண்டு' என்று இரகசியமாகவும் சொல்லமாட்டார்களே! எந்தத் தகப்பன் தான், தேவனுக்கு ஒப்பானவனும் நல்வழியில் நடப்பவனும் பொறியை அடக்கினவனும் சத்துருக்களுக்கும் அன்பனுமான தனது புத்திரனைக் காரணமின்றிக் கைவிடுவான்? அரசரே மன்மதனுக்கு அடிமைப்பட்டு இவ்வாறு சொல்லி விட்டால் இராஜ நீதியை யறிந்த எவன்தான் அதை ஒரு பொருளாக மனத்தில் எண்ணி அவ்வாறு நடப்பன்? இராம, இந்தவிஷயம் எல்லாருக்குந் தெரியு முன்னரே நீர் இந்த இராசசியத்தை எனது துணையால் உமது கைவசப்படுத்திக்கொள்ளுவீர். நான் கையில் விற்பிடித்து உமது பக்கத்தில் இருக்க, பிறாக்கு யமன்போல அச்சத்தை விளைக்குமவரான உமக்கு எவன் இடையூறு செய்வான்? மனிதரிற் சிறந்தவரே, இந்நகரம் நமக்குப் பகையாக இருப்பின், நான், என் பாணங்களினால் மனிதப்பூண்டே இல்லாமல் செய்துவிடுகின்றேன். பரதருடைய பக்ஷத்தைச் சேர்ந்தவனாவது அவருக்கு நன்மையைத் தேடுகின்றவனாவது இருப்பின், அவன் இருந்த இடமே தெரியாமற் செய்துவிடுகின்றேன் நாம் அடக்கமுடையவராக இருப்பதனாலேதான் பிறர் நம்மை அலட்சியஞ் செய்கின்றார்கள். கைகேயியின் சொற்கேட்டு நமது தந்தை நமக்கே பகையாய் இருப்பாராயின், அவரையும் 'சத்துரு' என்றே எண்ணி, விசாரியாமலே கொல்லவாவது கொல்லுவோம், சிறையிலாவது இடுவோம். செருக்குக்கொண்டு 'இது நற்செய்கை இது தீச்செய்கை'

இலட்சுமணர் கைகேயியின் செருக்கைத் தாம் கெடுப்பதாகச் சொல்லல்

என்று பகுததறியுந திறமை யின்றிக கெடடவழியில இறஙகுபவா குரவராயிருபபினும அவரையுந தண் டிககவேணடியதுதான. புருஷசிஙகமே, நியாயமாக உம் முடையதான இராசசியததை இபபொழுது எனனபலத் தால என்ன ஏதுவைககொணடு அரசா கைகேயிககுக கொடுகக விருமபுகினறுா? இவவிராசசியமோ உமமுடை யது. பகைவரை வெலலுந திறல உடையீா, உமமையும என்னையும விரோதிததுககொணடு பரதருககு இராச்சியத் தைககொடுகக இத்தசரதருககு என்ன சகதி இருககிறது? அமமா, நான் எனது தமையனுரிடம உணமையாக அனபு வைததிருககினறேன அதறகுச சததியத்தைககொணடும, விலலைககொணடும, தானததைககொணடும, உமககிஷடமா னவறறைககொணடும ஆணையிடுகினறேன. கொழுநது விடடெரியுந தீயிலேனுங காடடிலேனும இராமா செலவா ராகுல அவவிடததில அவருககு முன்னா நான போவேன் என்று நீா எணணும. அமமா, சூரியன் இருளைபபோககுவது போல, நான எனது வீரததினுல உமது துககஙகளை நீககி வைககின்றேன. இராமரும நீரும எனது வலிமையைப பாாககககடவீாகள" என இவவாறு அமமகாறுகிய லகூஷ மணா சொன்னதைக கேடடுக கோசலை, வெகு துககத் துடன அழுதுகொணடு இராமரைப பாாததுச சொல்ல லாயினுள.

"உன தம்பி லக்ஷ்மணன் சொன்னதைக கேட்டாயா? அது உனக்கு நியாயமாக இருநதால அவவணணமே செய. என் சககளததி அநியாயமாகத் தூணட அவளுடைய வாாததையைக கேடடுககொணடு, என் னைப பரிதபிககவிடடு நீ காடடிறகுப் போ வது நியாயமன்று. நீ தருமததை அறிந் தவனுய அதன வழியிலேயே நடபபவனு மாக இருநதால, இஙகேயே யிருந்து எனக் குப் பணிவிடைகளைப புரிநதுகொணடு, மிகச் சிறநத தரு

தமபி சொன்ன படி என செயய க் கூடாதென்று இராமரைக கோ சலை கேடடல.

மததை நடததிவா. 'காசியபா, தமது இருககததிலேயே இருநதுகொணடு தமது தாயாருககுத தவறாது பணி விடைசெயது நலலுலகம அடைநதார' என்று தெரி கிறது உனககு அரசா எவவளவு கொணடாடத தகக வரோ, அவவளவு நானும கொணடாடத தககவளனறோ! இவவிடததை விடடு நீ காடடிறகுபபோக நான விடை கொடுககமாடடேன். நீ காடடிறகுப போன பினனா எனககு உயிரினாலும இனபததினாலும யாதொரு பயனு மிலலை. உனனுடன நான புலலைத தினறுகொணடிருநதா லும எனககு அதுதான நலலது பரிதபிககும என்னை விடடு நீ காடடிறகுச செனறால நான இஙகேயே படடினி யாகக கிடநது என பிராணனை விடடுவேன. அதருமத் தால சமுத்திரராஜனுககுப பிரமகததி வநததுபோல, அதனால உலகததில மிகப போபெறற நரகம உனககு வநதுவிடும" என்று கௌசலை சொலலிப பரிதபிததாள.

தருமசிநதையுளள அநத இராமா இதைகக கேடடு, தருமததை யொடடிப பினவருமாறு மறுமொழி உரைகக லுறறார:—“அமமா, நான் எனது தந தையார சொலலைத தவறி நடககககூடாது. ஆகையால, உமமைத தலையால வணஙகி வேணடிககொளளுகினறேன். நான காடடிறகுப போக விருமபுகின்றேன 'தநதையினது கடடளை' என்ற ஒரே கௌரவததினால, தருமததை யறிநதவரும மிகக விரதத் தை மேறகொணடவருமான கணடுமகாரஷியும 'கோகததி யானது மிகபபாவம்' என்று தெரிநதும அதைச செய தார. நமது வமசத்திலும, பிதாவான சகரமகாராஜ ருடைய கடடளைபபடி அவருடைய அறுபதினாயிரம புத் திரரகள பூமியைத தோணடி வதததையும அடைநதார கள. ஜமதககினிமகாரஷியின புததிரரான பரசுராமா, காடடில தநதையின்சொலலைத தவறுதவராயத தமமைப

இராமருடைய நீதிசசொறகள

பெற்ற தாயான ரேணுகையைக் கோடரியால் வெட்டினார். தேவர்கட்கு ஒப்பான இவர்களும் வேறுபலரும் 'தந்தையின் சொல்லை நீக்கக்கூடாது' என்று அதைச் செய்து முடித்திருக்கின்றார்கள். ஆகையால், அவ்வண்ணமே நானும் தந்தையின் சொல்லைக் காப்பாற்றுகிறேன். இவ்வண்ணஞ் செய்யப்போகின்றவன் நான் ஒருவன் என்று நீர் எண்ணவேண்டாம். நான் சொல்லிய அந்தப் பெரியவர்களுஞ் செய்திருக்கின்றார்கள். உம்முடைய மனத்திற்கு விரோதமாக நான்மட்டும் அபூர்வமாக இப்பொழுது இவ்வாறு செய்யவில்லை. பூர்வர்களின் கருத்தே இவ்வாறு செய்வது செல்லத்தக்கது, பலர்செல்லும் மார்க்கமன்றோ! ஆகையால், நான் இவ்வாறுதான் செய்யவேண்டும் உலகத்தில் வேறுவகையாகச் செய்யப்படுகின்றதில்லை. ஒரு காலத்திலும் தந்தைசொற் கேட்டுக் குறைவடைந்தவர் இல்லை" என்று இவ்வாறு தமது தாயாரிடஞ் சொல்லி, அதன்பின்னர் லக்ஷ்மணரைப் பார்த்து, வார்த்தை சொல்வதில் வல்லவரும் வில்லாளிக ளெல்லாரினுஞ் சிறந்தவருமான இராமர் பின்வருமாறு சொல்லலானார்.

"லக்ஷ்மண, உனக்கு என்னிடமிருக்குஞ் சிநேகம், உனது பராக்கிரமம், பலம், பிறராற் கிட்டுவதற்கு அரிய வீரம், உனது துயரம், மாதாவின் மிக்கதுயர் இவைகளையெல்லாம் நான் நன்றாக அறிந்திருந்தும், சத்தியம் அடக்கம் இவற்றின் உண்மையைத் தெரிந்திருப்பதால் சத்தியத்திலேயே நடக்கின்றேன் தருமந்தான் இவ்வுலகத்தில் எல்லாப் புருஷார்த்தங்களினுஞ் சிறந்தது. அந்தத் தருமத்திலேதான் சத்தியமும் விளங்குகின்றது. மாதாவின் வாக்கியத்தினும் உத்தமமான பிதிருவாக்கியத்தின்படி நடப்பதும் தருமத்தைச் சோந்ததே. தருமத்தைத் தஞ்சமாக அடைந்

தருமமே உத்தமம்

திருபபவன், தநதை தாய அநதணா இவாகள சொனன சொறகளுககு வாககளித்து அவவாறு நடவாமல இருத் தலகூடாது. ஆகையால், நான, எனதநதையின சொலலைத் தளளச் சகதியுடையவன் அலலேன. எனது தநதையார் கடடளைபபடியே கைகேயி என்னைக காடடிறகுப போக ஏவினள, ஆதலால நீ, பெருமைககுணமறற க்ஷததிரிய தருமஙகளைக கைககொளளும புத்தியை விடடுடு. தருமப படி நட; கொடுமையென்பது வேணடாம். நீஎன புத் தியைப பினசென்று நடககக கடவாய'' என்று இராமா தாம வைத்திருநத அனபால தமது தமபியைப பாாத்து இவவிதமாகச சொலலி அதன பின மறுபடியும கௌசல் யையைப பாாததுத தமதுகைகளைக கூபபிககொணடு நமஸகாரஞ செயது, " அமமா, காடடிறகுபபோக எனககு விடைகொடுதது அனுபபுவீா. எனபிராணனமேல ஆணை யிடடு வேணடிககொளளுகிறேன. எனககு ஸவஸதயயனம் பணணும. யயாதி எனனும ராஜரிஷி எவவாறு தேவலோ கததை விடடு வநது மீணடும அவ்வுலகைச சோநதாரோ, அதுபோல, நான காடடுககுசசெனறு அஙகு எனதநதை சொறபடி வாசமபணணி, அவாவாககை உணமையாகச் செயது விடடு, இநநகாததிறகுத திருமபிவருவேன உமது துககததை அடககிககொளளும; விசனபபடவேணடாம; நான என் தநதையின வாககைக காபபாறறிவைதது மறு படி இநநகரம வநதடைவேன நீா, நான, சீதை, லக்ஷம ணன், சுமிததிரை ஆகிய ஐவரும எனது தகபபனாசொற படி நடககவேணடியவாகள இதுதான் தொன்றுதொடடு வருந தருமம. அமமா, என் படடாபிஷேகததுககாக நீா செயதுகொணடிருககுங காரியஙகளை நிறுததும. துகக மென்பதை உமது மனததை விடடு அகறறும நான காடடில வசிபபதறகாகக கொணடிருககும எணணததை நிறைவேறறிவையும'' எனறுா.

இராமருடைய தருமமும், தைரியமும, பயமின்மை யும தோறறும பேசசைக கேட்டு, கௌசலயை, மூாசசித் தவளபோல பிரஜஞையை யடைநது, தனது குமாரனை அன்புடன் பாாத்து, "உனககு உன் தந்தை எபபடி குருவோ, அப்படியே அன்றோ நானும அவா எவவளவு சிரமபபடடு உனனை வளர்ததாரோ, அதுபோலவனறோ நானும வளாதேதன். அவரவவளவு சம் பநதம எனககும இருககின்றது. ஆகை யால், நீ காடடிறகுப போக நான் இசைய மாடடேன. மிகவுந துககித்துக்கொண் டிருககும என்னை விடடு நீ போவதும நியாயமனறு நீ போனபின்பு எனககு என் பிராணனாலே தான் எனன பிரயோசனம்? பரலோகத்திலுலேதான் என்ன பலன? பிதிருலோகததில் பெறும ஸவதையால தான் பயன் என்ன? அமிருததததாலதான் பலன என் ன? இவ்வுலகத்திலுளள எலலாப பிராணிகளையும பார்ப பதை விட ஒரு முகூாததகாலம உன் முகததை நான் பாாததிருநதால அது போதுமே என ஆனநதத்திறகு" என மீணடுங கூறினாள. இவவாறு கௌசலயை சொலல, இராமா, மனிதாகளால கொளளிககடடையைக கொணடு வெருடடபபடடபோதிலும பெரிய யானை தான செல் லும மாாககததிலேயே செலவதுபோல, தமது தாயின எளிய அழுகையைக கேடடும தமது எணணததிலேயே இருநதாா.

கோசலை இராம ரைக காடடிககுப போகவேணடாம எனறு தடுததல

வெகு தருமவழியில நடபபவரான இராமா, அப்போது குறறுயிராயிருககுந தாயையும, மிகவும எளிமையை யடைநது துககததால பரிதபிததுக்கொண் டிருககும லக்ஷமணரையும பாாதது, "லக்ஷ் மண, இடைவிடாத உனது பகதியையும் பராககிரமத்தையும நான் நன்றாக அறிநதிருககிறேன். எனது உணமையான எண்ணததை அறியாமல, மிகவும்

இராமா தமபிக குசசெயத தா மோபதேசம

